உ

சிவமயம்.

கல்லுப்பட்டியாகிய சுப்பிரமணியபுரம்

நகரத்தார்செய்து கொண்டிருக்கிற

# தீர்மானங்கள்.







காரைக்குடி

“தனவைசிய ஊழியன் பிரஸில்”

அச்சு இயற்றப் பெற்றது.

1921





உ

கணபதி துணை.

கல்லுப்பட்டியாகிய சுப்பிரமணியபுரம்

# நகரத்தார்

## செய்துகொண்டிருக்கிற

# தீர்மானங்கள்.

துன்மதி-ஞு ஐப்பசிமீ கடுஉ

(க) கழுத்துருவுக்குப் பொன் கொடுப்பதற்கு மாப்பிள்ளை வீட்டார் மஞ்சள் வீசை ஒன்றும் குங்குமம் சந்தனம் புஷ்பம் தேங்காய் (கசு) வரையிலும்வாழைப்பழம் கடுக வரையிலும்எலுமிச்சம்பழம் கOக வரையிலும் வெற்றிலைபாக்கும் கொண்டுவரச்செய்கிறது. இதுபோல் நாமும் கொண்டுபோய் வருகிறது. பெண் வீட்டார் மூன்றுவகைப்பலகாரம் செய்து வருகிறவர்களைச் சாப்பிடச்செய்கிறது. மாப்பிள்ளை வீட்டாருக்கு வாழைப்பழம் ருக வரையிலும் பலகாரம் பெரிதில்லாமல் பந்திக்குப் போடுகிறமாதிரி சிறிதாகச்செய்து மேற்கண்ட மூன்றுவகைப்பலகாரத்தில் வகைக்கு [illegible] வரையிலும் கொடுத்தனுப்புகிறது. மேற்கண்ட விசேஷத்தில் பெண் வீ



டுக்காரரும் மாப்பிள்ளை வீட்டுக்காரரும் பேற்கண்டிருக்கிறதை விஞல் வேறு எவ்விதமான சட்டி சாமான் வகையருக்கள் கொடுப்பதும் வாங்குவதுமில்லை. வெற்றிலையும் பாக்கு பெ படி ௨. வரையும் கொடுக்கிறது. பழம் பலகாரங்களுக்காகரூபாய் கொடுப்பதும் வாங்குவதுமில்லை.

(௨) கலியாணத்தில் வேவு திருப்பூட்டுகிறது முதலான சகல முறைகளுக்கும் சட்டி சவுக்கம் கொட்டான் சில்லரைச்சாமான் பழம் வகையரு கொடுப்பதும் வாங்குவதுமில்லை. திருப்பூட்டுகிறவர்கள் இசைகுடிமானம் எழுதுகிறவர்கள் மாமக்காரர் சடங்குக்காரர்களுக்கு பெட்டியில் வெற்றிலையுடன் பாக்கு பெ. படி ஒன்று வரை பாக்கு மட்டும் கொடுக்கிறது.

(௩.) பணம் எழுதிய புள்ளிக்குப் பாக்குப்பணமும் பெண்பிள்ளைகளுக்கு புள்ளி ஒன்றிற்கு பாக்கு வகையருவுக்காக ரூ. க வரையிலும்கொடுக்கிறது. வெற்றிலைபாக்கு எடுத்துப்போட்டுக்கொள்ளுகிறது. மாமவேவு எடுத்துகிறவர்களுக்கு இனம் ஒன்றுக்குவெற்றிலையுடன் பாக்கு பெ. படி ஒன்றுவரை மட்டும் பெட்டியிற் கொடுக்கிறது. வேறு எவ்வித சாமான்களும் கொடுப்பதும் வாங்குவதுமில்லை.

(௪) பெண்ணழைத்த வீட்டிலும் வேவு எடுத்தினவீட்டிலும் பலகாரம் மூன்று வகைக்குள் சிறிதாகச் செய்து உபயோகிக்கிறது.

(௫) ருதுசடங்கிற்கும் பிள்ளைபிறந்த வீட்டிலும் சர்க்கரை, கற்கண்டு, சீனி, இவைகளில் ஒன்று அள்ளி வழங்குகிறது. வெற்றிலை பாக்கும் போட்டுக்கொள்ளு கிறது. பணம் சில்லரைச்சாமான் வகையறுக்கொடுப்ப தும் வாங்குவதுமில்லை.

(௬) விளையாட்டுப்பொட்டு [illegible] வெளிற்றும் பிள்ளைப் பாலைச்சாதம் ஒருவளைக்கட்டு [illegible] ருக்குக் கொடுக்கிறது.



(௭) காப்புக்கட்டுப் புதுமையில் சீனி பாக்கு வகையறுவுக்காக புள்ளி ஒன்றுக்கு ரூ. ௧. வரையிலும் மறு புதுமைக்கு ரூ. ௨ வரையிலும் கொடுக்கிறது. பழங்கள் சட்டி கொட்டான், சவுக்கம் வகையறு எவ் விதச்சாமான்களும் கொடுப்பதும் வாங்குவதுமில்லை. மாமவேவு எடுக்துகிறவர்களுக்கு இனம் ஒன்றுக்கு வெற்றிலைபுடன்பாக்கு பெ. படி ஒன்றுவரையிலும் பெட் டியிற் கொடுக்கிறது. வேறு எவ்வித சாமான்களும் கொடுப்பதும் வாங்குவதுமில்லை. ஊருக்குள் சீனி, கா ப்பரிசி வகையறுக்கொடுக்கிறதில்லை. அதற்காக இவ்வூர் நகரக்கோவிலுக்கு ரூ. ௧௱-கொடுத்து அதன்மேல் ஊர்ப்புறமை சொல்லி நடந்துகிறது.

(௮) பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்தில் வைப்பத ற்குத்தேங்காய், வாழைப்பழம், வெற்றிலைபாக்கு, நெல் கொண்டுபோகிறது. மாமக்காரர் உபாத்தியாயருக்கு ரூ ௧-ம் கொடுக்கிறது. வந்தவர்களுக்குப் பலகாரம் பழம்

வகையறாக்கொடுக்கிறதில்லை. கற்கண்டு சீனி சர்க்கரை இவைகளிலொன்றும் காப்பரிசியும் அள்ளிக்கொடுக்கிறது. பிள்ளைகள் மகார்நோன்புக்குப் பணம் வாங்கவரும்போது மேற்கண்டவைகளிலொன்று அள்ளிவழங்குகிறது.

(௯) மகார்நோன்புக்குப் பிள்ளைகளைச் சொந்தக்காரர் வீட்டிற்குக் கூட்டிவருவதற்கு மூன்றுவகை வரை பலகாரமும் சாப்பாடும் வைத்துக்கொள்ளுகிறது. கூட வருகிற பிள்ளைகளுக்குப் பணம் சட்டி கொட்டான் மரவை சில்லரைச் சாமான் வகையறா ஒன்றும் கொடுக்கிறதில்லை. உபாத்தியாயருக்கு ரூ. ௧௫ வரையிலும் கூட்டி வருகிற பிள்ளைக்கு ரூ. ௫௧ வரையிலும் கொடுக்கிறது.

(௰) கார்த்திகைப்புதுமை திருவாதிரைப் புதுமைகளில் திருவாதிரைத் தோசை பணிபாரம் வாழைப்பழம் இவைகள் சாப்பிடுகிறதைத்தவிர கையிற்கொடுக்கிறதில்லை. மரவை வகையறாச் சில்லரைச்சாமான்களும் அவைகளுக்காகப் பணமும் கொடுக்கிறதில்லை.

(௧௧) கலியாணம் கார்த்திகைப் புதுமைக்கு வர்ப்பாக்கு சி. படி ஒன்று கொடுக்கிறது.

(௧௨) கலியாணப்புதுமை, கார்த்திகைப்புதுமை, திருவாதிரைப்புதுமை, சஷ்டியப்தபூர்த்தி, சதாபிஷேகம், கிரகப்பிரவேசம், முதலிய விசேஷங்களிலும் கழுத்துருவுக்குப்பொன்கொடுத்தல், ருது சடங்கு, தீர்த்தம், ஐந்துமருந்து சாப்பிடுதல், பிரசவத்திற்குக் கூட்டிவருதல் முதலானவைகளிலும் சுத்தபோஜனமாக ௧௦-வகைவரை

கறியும் மூன்றுவகை வரை குழம்பும் இரசம் மூன்றாம் பாயசம் இரண்டுவரையிலும் வர்க்கான்னம் இரண்டு வரையிலும் வடை, அப்பளம், வாழைப்பழம், மாம்பழம் பலாப்பழம், இவைகள் அவரவர்கள் இஷ்டப்படி இலையில் உபயோகிக்கச்செய்கிறது.

(கங) கலியாணம் முதலிய சகல விசேஷங்களிலும் காலைமாலைப் பலகாரம் மூன்றுவகை வரையில் இலையில் உபயோகிக்கச்செய்கிறது. பழையதிற்கு இரண்டு வகை வரை கறிகள் செய்கிறது.

(கச) தச்சு செய்தல், நிலைவைத்தல், கிரகப்பிரவேசம், சுவீகாரப்புத்திரமை, சஷ்டியப்தபூர்த்தி, சதாபிஷேகம், இவைகளில் காப்பி வெற்றிலைபாக்கு காளாஞ்சி மட்டும் கொடுக்கிறது.

(கரு) கிரகப்பிரவேசம், சஷ்டியப்தபூர்த்தி, சதாபிஷேகம், சுவீகாரப்புத்திரமை இவைகளில் நகரத்தார்கள் சாப்பாடு மாத்திரம் வைத்துக்கொள்ளுகிறது. தேங்காய்மூடியும், வாழைப்பழமும், வெற்றிலையும் பாக்கு சி. படி. ௧-யும் கொடுக்கிறது. பெண்களுக்கு ஒன்றும் கொடுக்கிறதில்லை. வெற்றிலை பாக்குப்போட்டுக்கொள்கிறது.

(கசா) கலியாணம் முதலிய சகல விசேஷங்களிலும் பழம் சட்டி சில்லரைச் சாமான்களும் அவைகளுக்காகப் பணமும் கொடுப்பதும் வாங்குவதுமில்லை. பூச்செண்டும் எலுமிச்சம்பழமும் கொடுக்கிறது.

(௧௭) கலியாணப்புதுமை முதலிய சகல விசேஷங்களிலும் இரண்டு ஜதை மேளம் வரையிலும் பியாண்டு ஒரு ஜோடியும் கதா கச்சேரிகளில் இரண்டு வரையிலும் வைத்துக்கொள்ளுகிறது. மற்ற வாத்தியம் சதிர் முதலானவைகள் நடத்துகிறதில்லை.

(௧௮) மாப்பிள்ளை பெண் அழைக்கிறபோது வாணம், மத்தாப்பு, அவுட்டு, அதிர்வேட்டு, வகையறாக்கள் உபயோகித்துக்கொள்ளுகிறதில்லை.

(௧௯) மாராயம் சொல்லவருகிற வண்ணானுக்கு ருது சடங்கிற்கு ரூ. ௩வ-வரையிலும் பிள்ளை பிறந்ததற்கு ரூ. ௫வ வரையிலும் கொடுத்துச்சாப்பாடுபோடுகிறது. மற்றப்படி ஒன்றும் கொடுக்கிறதில்லை. துடுக்கும்போடுகிறதில்லை.

(௨௦) பிள்ளை பிறந்திதென்று சொல்லவருகிறவர்களுக்கு ரூ. ௫ வரையில் ஒருஜோடி வேஷ்டி மட்டும் வாங்கிக்கொடுக்கிறது.

(௨௧) நமது பெண்கள் சந்தை கடைத்தெரு முதலான மற்றவிடங்களில் பலகாரம், பால், மோர், வகையறாக்கொண்டுபோய் விற்கிறதில்லை. விலைக்கு விறகுக்கட்டும் சாணாவீட்டில் குருத்தும் வாங்கப்போகிறதில்லை.

(௨௨) தானம் செய்கிற வீட்டில் ஊர் நகரத்தாருக்குப் பாக்குக்கொடுக்கிறதில்லை.

(௨௩) தின்மை சபிண்டிதீகரவில் பாக்கு பணம் சட்டி வகையறாக்கொடுப்பதும் வாங்குவதுமில்லை.

(௨௪) தின்மைக்குமட்டும் வடை பாயாசம் பழம் அப்பளம் வர்க்கான்னம் தேங்காய்ப்பூ வகையறாச்செய்கிறதில்லை. ௧௦-வகை வரை கறியும் மூன்றுவகை வரை குழம்பும் இரசம் மூன்றும் செய்து உபயோகித்துக்கொள்ளுகிறது.

(௨௫) தின்மைக்கு நெல் ஒரு கடகமும் நல்லெண்ணெ பெ. படி ௨-வரையிலும் மஞ்சள் வீசை ௯-வரையிலும் சீயக்காய் வீசை ௧. வரையிலும் பட்டு, புஷ்பம், பன்னீர், கொண்டுபோகிறது. கொண்டுவருகிறவர்களையும் அதுபோற் கொண்டுவரச்செய்கிறது.

(௨௬) ஷஷ்டி விசேஷத்தில் சட்டியும் பணமும் கொடுப்பதும் வாங்குவதுமில்லை. வெற்றிலை பாக்கு உபயோகப்படுத்திக்கொள்ளுகிறது.

(௨௭) எல்லா விசேஷங்களிலும் மூன்றுவகைப் பலகாரம் வரையிலும் வாழைப்பழமும் காப்பியும் செய்து ஆண்பிள்ளைகள் பெண்பிள்ளைகள் எல்லோரும் இலைபோட்டுச்சாப்பிடுகிறது. கையிற்கொடுப்பதும் வாங்குவதுமில்லை. எல்லா விசேஷங்களிலும் எலுமிச்சம் பழம் பூர்செண்டு மட்டும் கொடுக்கிறது. வேறு யாதொன்றும் கொடுப்பதும் வாங்குவதுமில்லை.

(௨௮) சஷ்டியப்தபூர்த்தி சதாபிஷேகம் இரண்டிற்குமட்டும் சாப்பாடு மேற்கண்டபடிக்கும் சாமான்

வகையறாக்கள் அவரவர்கள் இஷ்டம்போலும் செய்கிறது.

(உகூ) எ-வயதிற்குமேற்பட்ட பெண்கள் நாடகம் கூத்துப்பார்க்கப்போகிறதில்லை.

(ஙo) இதிற் கண்டிருப்பதற்கு விபணை நாம் கொடுப்பதும் வாங்குவதுமில்லை. மேற்கண்ட எல்லா விசேஷங்களிலும் விவரித்திருப்பதற்கு அதிகமின்றி அவரவர்கள் சௌகரியம்போற்செய்கிறது.

(ஙo) கலியாணம் புதுமை முதலிய நன்மைதின்மைபாதி சகல விசேஷங்களிலும் மேற்கண்டபடி நமதூரிலும், அயலூர்களிலும் நாம் நடந்துகொள்ளுகிறது.

(ஙஉ) மேற்கண்டிருப்பவைகளுக்கு விரோதமாக மீறி நடப்பவர்களுக்கு நகரத்தார்கூடித் தீர்மானம் செய்துகொள்ளுகிறது.

இந்தத்தீர்மானங்கள் துன்மதி-௵ ஐப்பசி-மீ ஙOஉ முதல் ஊர்ஜிதத்திற்குக்கொண்டுவருகிறது.

---




காரைக்குடி 316—150—21.